மலர் மாலையை வள்ளியின் கூந்தலிலே முடித்தும், (அந்த) மாது வள்ளியின் காலை வருடியும், அவள் வாயிதழ் ஊறலைப் பருகியும் மோகம் தீர -

அழகிய தோள்களில் (அவளை) அணைத்தும், ஆகாயத்தை அளாவும் சோலைகள் உள்ள வாகை மாநகரில் வந்து விருப்புடன் வீற்றிருக்கும் பெருமாளே!

(விருப்பில் உழல்வேனோ)

## 7. விசுவை

## 995.

திருகுபில்லை அணிந்துள்ள கூந்தலை (வகிர்ந்து) வாரி வகுத்து, முடியில் மலர் அணிந்து, ஒருவகையான அழகு விளங்கச்

செய்வதால் வரும் சிறப்பான முகம் விளக்கம்தர, கொங்கைகள் குலுங்க வருகின்ற, மோகத்தைத் தரும்

மாதர்களின் வலையிலே விழுந்து, அறிவு மெலிவுற்று, (நான்) சோர்வு அடையாமல்

---

தெளிவாக்குகின்றன. மேலும் பாடல் 819-ல் வட விஜயபுரத்தனில் மேவிய பெருமாளே" என்ற அடியில், 'வட' என்ற குறிப்புளதால் இந்தத் தலம் விஜயவாடா என இப்போது வழங்கும் (Bezwada) என்று தோன்றுகின்றது. இங்கே மலையடிவாரத்தில் 'அறுமுகனார்' கோயில் ஒன்று இருக்கின்றது. அருட்கவி சேதுராமனார் அந்த முருகரைத் (22-8-1954 தேதியில்) தரிசித்தபொழுது பின்வரும் அடிகள் அவர் பாடல்களில் உதித்துள.

1. "அஜவாகன லகுஜ ! உத்தர
   விஜயாபுரி மெத்தவு மெச்சிய மந்தகாசா"
2. "கிருட்டிணாநதி நீளலை மோதிட
   வடக்கில் வாழ்விஜ யாபுரி மேவிய பெருமாளே"

மேலும், இந்த வட விஜயபுரத்தைத்தான் அருணகிரியார் பாடியுள்ளனார் என்பதும்-

'அருணகிரி பரவுமலை அடிவாரத்-
தறுமுகவ விஜயபதி மருகோனே:
வருமடியர் தொழுதமயில் மிசையோனே!
வட விஜய புரமருவு பெருமாளே'

என வரும் சேதுராமனார் வாக்கால் தெளிவாகின்றது.

அமரர் மகிழ்ந்து தொழுது வணங்கு
அடியிணை யன்பொ டருள்வாயே;

வரையை முனிந்து விழவெ கடிந்து
வடிவெ லெறிந்த திறலோனே-
*மதுரித செஞ்சொல் குறமட மங்கை
நகிலது பொங்க வரும்வேலா;

விரைசெறி கொன்றை யறுகு புனைந்த
விடையரர் தந்த முருகோனே-
விரைமிகு †சந்து பொழில்கள் துலங்கு
விசைவை விளங்கு பெருமாளே.

---

* வள்ளியின் செஞ்சொல் - 'இந்தளாம்ருத வசனம்', 'சஞ்சி தாம்ருத வசனம்', 'பண்கள் தங்கு அடர்ந்த இன்சொல்'; 'நல்ல சொல்லினைச் சேர்க்கின்ற சொல்' (திருப்புகழ் 289, 79, 96, கந்தரலங்காரம் 10) என்றெல்லாம் வியக்கப்பட்டுளது.

† "சந்தமர் பொழிலணி சவ்வை" - சம்பந்தர் 3-18-11.

தேவர்கள் மகிழ்ச்சியுற்றுத் தொழுது வணங்குகின்ற உனது திருவடியிரண்டையும் அன்புடனே (எனக்குத்) தந்தருளுவாயாக;

கிரௌஞ்சகிரிமேற் கோபித்து, அது அழிபட்டு விழும்படிக் கண்டித்துக், கூரிய வேலை அதன்மேற் செலுத்தின திறமை வாய்ந்தவனே!

இனிமை வாய்ந்த செவ்விய சொற்களை உடைய குறமகளாம் அழகிய வள்ளியின் (நகில்) கொங்கைகள் பூரிக்க அவளிடம் சென்ற வேலனே!

நறுமணம் கொண்ட கொன்றை, அறுகு இவைகளைச் சூடியுள்ள இடபவாகனராம் (அரர்) சிவபிரான் அருளிய குழந்தையே!

வாசனை கொண்ட சந்தன மரச் சோலைகள் விளங்கும் **விசுவை** என்னும் தலத்தில் விளங்கி வீற்றிருக்கும் பெருமாளே!

(அடியிணை அன்பொ டருள்வாயே)

**–வேலுமயிலுந் துணை–**

வேலும் மயிலுந் துணை.

# முருகவேள் பன்னிரு திருமுறை

## பொருளடக்கம் - (தொகுதி 3, 4)

பாடல்களின் பாட பேதங்கள் முதலியவற்றால் ஏற்பட்ட வேறு ஸ்தலங்களும் அவற்றுக்கு உரிய பாடல்களின் எண்களும்.



வேலு மயிலுந் துணை.

முருகவேள் பன்னிரு திருமுறை - தொகுதி 4.

# பாட்டு முதற்குறிப் பகராதி.

உ

வேலு மயிலுந் துணை

# முருகவேள் பன்னிரு திருமுறை

## விஷய ஆராய்ச்சி — (தொகுதி 3, 4.)

## சிவபிரான்

நாயன்மார்:

பாரத விஷயங்கள் 481



பார்வதி:

முருகன்:

**முனிவர்கள்**

## ராமாயண விஷயங்கள்



## ராவணன்